**चच्चाचच्चजकत् विच्वम् चरीरम् परमेष्टिन: ।**
**यतितम् चतितिप्रोक्तम् यच्चाचतिति कत्यते ।**
**तयो: पतित्वात्तु चिव: सतचत् पतिरुच्यते ॥**

**சச்சாசச்சஜகத் விச்வம் சரீரம் பரமேஷ்டிந: ।**
**யதிதம் சதிதிப்ரோக்தம் யச்சாசதிதி கத்யதே ।**
**தயோ: பதித்வாத்து சிவ: ஸதசத் பதிருச்யதே ॥**

இங்ஙனங் கூறிற்று. பரமான்வாகிய சிவபிரானுர் தமது அருட்சத்தியினுல் சேதனா சேதனப் பிரபஞ்சங்களெல்லாம் வியாபித்து அந்தரியாமியாய் நின்று செலுத்தி, அவை தம்மை ஆதாரமாகக் கொண்டு நிற்கச் செய்தருளினுர். இந்த மத்தியந்தின சாகை கண்ணுவசாகைகளின் பொருஊ வாங்கி அருணந்தி சிவாசாரியர், "இந்நிஜலதானில்ஜலயே னெல்லாமீசனிடத்திலு, மீசனெல்லாவிடத்திலு நின்றவந்நிஜலயை யறிந்து" என்று கூறியருளினுர்.

---

**VIII.**

(பிரணவ பஞ்சாக்ஷர வாயிலாகச் சிவசத்தியோடு கூடிய சிவபிராஜன ஆன்மாவிலே வைத்துத் தியானிக்கும் மற்ருேர் உபாயம் கூறினமை)

**आत्मानमरणिम्क्रुत्वा प्रणवञ्चोत्तरारणिम्**
**ञाननिर्मतनातेवपाचन्तकतिपण्टित: ।**

**ஆத்மாநமரணிம்க்ருத்வா ப்ரணவஞ்சோத்தராரணிம்**
**ஞாநநிர்மதநாதேவபாசந்தகதிபண்டித: ।**

(இதன் பொருள்) (22. 23) ஆன்மாவை அரணியாகவும், (கீழ்க்கடை கோலாகவும்) பிரணவத்தை மேற்கடை கோலாகவுங் கொண்டு (இடைவிடாது சிந்தித்தலாம்) கடைதல் வாயிலாகப் பிறந்த சிவஞானக்கினியினுல் பாசத்தை அறிஞன் தகிக்கின்ருன்.

## (திராவிட இரத்னப் பிரகாசிகை)

**(34)** ஆன்மாவிலே சிவத்தைக் காண்டல் - கடவல்லியுப நிஷதமும் சுவேதாசுவரோபநிஷதமும் அவரை (சிவபிரானை) ஆன்மாவில் உளராக எவர் காண்கின்றாரோ, அவருக்கே நித்தியமாகிய பேரின்பமெனப் பொருள் படும்.

**तमात्मस्तम् येनु पच्यन्ति तीरास्तेषाम् चुकम् चाच्वतम् नेतरेषाम् ।**

**தமாத்மஸ்தம் யேநு பச்யந்தி தீராஸ்தேஷாம் சுகம் சாச்வதம் நேதரேஷாம் ।**

என்று கூறிய மந்திரத்துக்கு உபப்பிரும்மணமாகப் போந்த வாயுசங்கிதை

**तस्मात् चकतया चक्त्याक्रुति पच्यन्तियेचिवम् तेषाम् चाच्वतिकी**
**चान्तिर्नेतरेषा मितिच्रुतिः ।**

**தஸ்மாத் சகதயா சக்த்யாக்ருதி பச்யந்தியேசிவம் தேஷாம் சாச்வதிகீ**
**சாந்திர்நேதரேஷா மிதிச்ருதி: ।**

இதயாகாசத்திலே (அறிவின்கண்ணே) அருட்சத்தியோடுகூடச் சிவத்தை எவர் அறிகின்றாரோ, அவர்க்கே நித்தியமாகிய பேரின்பமாம் என்று கூறிற்று. பின்னரும் சுவேதாசுவதரோபநிஷதம் (பிரமஞானிகளாகிய) அவர்கள் தியானயோக வாயிலாகச் சர்வஞ்ஞதை முதலிய சுவகுணங்களினாலே ஆவரிக்கப்பட்டிருக்கும் சிவசத்தியைக் கண்டார்கள் என்ற கருத்தினால்

**तेत्यान योकातनुकता अपच्यन्तेवात्म चक्तिम् च्वकुणैर्नि कूटाम् ।**

**தேத்யாந யோகாதநுகதா அபச்யந்தேவாத்ம சக்திம் ச்வகுணைர்நி கூடாம் ।**

என்று கூறிற்று. இவ்வுண்மை கூர்மபுராண உத்தரபாகத்து முப்பத்தெட்டாம் அத்தியாயத்தினுலும், சிகரிணிமாஊல, இரத்நத்திரய பரீக்ஷை முதலியவைகளாலும் உணரப்படும். மகோபப் பிருமணங்களிலே சிகாரம் சிவம் என்றும், வகாரம் சத்தி என்றும், யகாரம் ஆன்மா என்றும், நகாரம் மாயை என்றும், மகாரம் மலம் என்றும் போந்த கருத்தினுல்

**चिकारम् चिवरूपन्तु वकारम् चक्तिरुच्यते ।**
**यकारमात्मरूपञ्च नकारम् क्रन्ति रूपकम् ।**
**मकारम् मलरूपञ्च इत्यर्त्तः पञ्चवर्णकः ॥**

**சிகாரம் சிவரூபந்து வகாரம் சக்திருச்யதே ।**
**யகாரமாத்மரூபஞ்ச நகாரம் க்ரந்தி ரூபகம் ।**
**மகாரம் மலரூபஞ்ச இத்யர்த்த: பஞ்சவர்ணக: ॥**

என்று கூறிற்று. முதற்கண்ணின்ற சிகாரமுதலிய இரு அக்ஷரமும் பதியாகிய சிவத்தையும், யகாரம் சேதனப் பிரபஞ்சமாகிய ஆன்மாவையும், நகார முதலிய இரு அக்ஷரமும் அசேதனப் பிரபஞ்சமாகிய பாசத்தையும் உணர்த்தியவாம் எனக் கொண்டு, ஆன்மாவிலே அருளோடு கூடிய சிவத்தை இடையறுது தயிலதாரை போல மேலே சொல்லிய உபநிஷத உபப்பிரும்மணங்களுக் கிசையத் தியான யோ கப்பியாசஞ் செய்தலினுலே பாசந்தகிக்கப்பட்டுப்போம் என்பது பெறப்படும். கைலாச சங்கிதையானது வேதங்கள் பிரணவத்தினின்று தோன்றிய வாமென்றும், பிரணவப் பொருள் சிவபெருமான் என்றுங்கொண்ட கருத்தினுல்

**वेता: प्रणवचम्पूता: प्रणवार्त्ता मकेच्वर: ।**

**வேதா: ப்ரணவசம்பூதா: ப்ரணவார்த்தா மகேச்வர: ।**

என்று கூறிற்று. சிவபிரானே பிரணவம் என்றும், பிரணவமே சிவபிரான் என்றும், வாச்சிய வாசக சம்பந்தத்தினால் அதிகம் பேதம் இன்றாம் என்றுங்கொண்டு, சிவபுராணம்

**चिवोवा प्रणवोक्येष प्रणवोवा चिव: स्मिरुत: ।**
**वाच्य वाचकयोर् पेतोनात् यन्तम् वित्यतेयत: ॥**

**சிவோவா ப்ரணவோக்யேஷ ப்ரணவோவா சிவ: ஸ்மிருத: ।**
**வாச்ய வாசகயோர் பேதோநாத் யந்தம் வித்யதேயத: ॥**

என்று கூறிற்று. இதனுல் மேலே கூறிய பஞ்சாக்ஷரத்தின் முதல் இரண்டெழுத்தும் இந்தப் பிரணவ பஞ்சாக்ஷரத்தினுலே குறிக்கப்பட்டுள்ளது. கீழ்க்கடை கோலாகக் கொள்ளப்பட்ட ஆன்மாவானது ஸ்ரீபஞ்சாக்ஷரத்திலே நடு எழுத்தினுலே குறிக்கப்பட்ட (சேதனப் பிரபஞ்சமாகிய) ஆன்மாவாகும்; இந்த ஆன்மாவிலே பிரணவப்பொருளாம் அருட்சத்தியோடு கூடிய சிவத்தை இடையருது அபேதமுறத்தியானதித்தல் வேண்டும் என்றும், அதனுல் பாசம் தகிக்கப்பட்டுப்போம் என்றும் உண்மை சாதித்துக் கைவல்லியோப நிஷதம் மேலே சொல்லியவாறு உபதேசித்தது, இந்த மந்திரத்தைப் போன்ற மற்றேர் மந்திரம் சுவேதாசுவதரோபநிஷத்து முதலாம் அத்தியாயத்துப் பதினுன்காம் மந்திரத்திலும் காணப்படுகின்றது. இது சுருதிகளிலன் றிப் புராணுபைப் பிரும்மணங்களிலுங் காணப்படுகின்றது. சீவான்மாவுக்கும் பரமான் மாவாகிய என்னேடுறப் பிரணவத்துக்கு முள்ள ஐக்கியம் சம்பந்தம் அறிவிக்கப்படுத லும் அறிவிப்பதுமாம் சம்பந்தம் என்று கொண்டே, கைலாயசங்கிதை

**சீவாத்மநோ மயாசார்த்தமை க்யஸ்ய ப்ரணவஸ்யச ।**
**போத்ய போதக பாவோத்ர சம்பப்த ஸ்ஸமுதீரித: ॥**

என்று கூறிற்று. பிரணவத்தின் பொருள் சிவபெருமான் என்ற கருத்தினுலன்றே, ஆன்மாவைக் கீழக்கடை கோலாகவும் (சிவப்பொருள் கொண்ட) பிரணவத்தை மேற்கடை கோலாகவுங் கொண்டு தியானமதனஞ் செய்தலால் அறிஞன் பாசத்தைத் தகிக்கின்றுன் எனப் பொருள்படும்

**आत्मानमाणिङ्क्रुत्वा ।**

**ஆத்மாநமாணிங்க்ருத்வா ।**

என்னுங் கைவல்லிய சுருதியோடு, “சிவத்தை அறிந்து சாந்தத்தை அடைகின்றுன்,” எனவும், “ஈசுரராகிய அச்சிவபிராஊ அறிந்து அமிர்தராகின்றுர்” எனவும், “பிரமத்தை

அறிகிறவன் பரத்தை (சிவத்தை) அடைகின்ருன் எனவும், "சிவபிராஊன அறிந்து வீடுறுகின்ருன்" எனவும் பொருள் கொள்ளும்

**ञात्वाचिवम् चान्तमत्यन्त मेति ।**
**ईचन्तम् ञात्वा म्रुता पवन्ति ।**
**प्रम्पविता प्नोतिपरम् ।**
**ञात्वातेवम् मुच्यते चर्वपाचै: ॥**

**ஞாத்வாசிவம் சாந்தமத்யந்த மேதி ।**
**ஈசந்தம் ஞாத்வா ம்ருதா பவந்தி ।**
**ப்ரம்பவிதா ப்நோதிபரம் ।**
**ஞாத்வாதேவம் முச்யதே சர்வபாசை: ॥**

என்னுஞ் சுருதிகளையும் சைவபாஷ்யத்து முதற் சூத்திரத்தின் கீழே நீலகண்ட சிவாசாரியர் ஒருங்கு உதகரித்திருக்கின்றார். சிவபிரான் ஓங்காரபொருள் என்பது கொண்டே "ஓங்காரத்துட் பொருளதாயினானை" என்றற் றொடக்கத்ட திராவிட சுருதிகளுங் காணப்படுகின்றன.

**यतो वाचो निवर्त्तन्ते प्राप्य मनाचाचक ।**

**யதோ வாசோ நிவர்த்தந்தே ப்ராப்ய மநாசாசக ।**

எவரிடத்திலிருந்து செல்லமாட்டாதுவாக்கானது மனசோடு மீண்டுவிடுகின்றது என்று தைத்திரீயசுருதி மொழிதலால், மேலே கண்டவாறு சட அந்தக்கரண மனசா காத ஞானசத்தி எனப்படும் "மனசு"க்கே ஆன்மாவைச் சிவத்தோடு ஐக்கியஞ் செய்யும் வன்மையுளதென்பது பெறப்படுகின்றது. இது பற்றியே பிருகதாரணியோப நிஷதம்

**मनचैवानुत् रुष्टव्यम् ।**

**மநசைவாநுத் ருஷ்டவ்யம் ।**

(அருண்) ஞானசத்தியினுல் மாத்திரம் அறியத்தக்கது என்று பொருள்படக் கூறியது மாமென்க. இம்மந்திர உண்மையைக் கடவல்லியுபநிஷதத்திலும் காண்க.

**IX.**

(மாண்டுக்கியோபநிஷதம் நிருசிம மோத்தாதாபநியுபநிஷதம் என்பவற்றின் நெறியானே அம்பிகாசமேதராகிய சிவபிராஞேடு ஆன்மா ஐக்கியமாமுறையும் அதஞலெய்தும் பாசநீக்க பலமும் உபதேசித்தமை)

**स एवमायापरि मोकितात्मा**
**चरीर मास्ताय करोतिचर्वम् ।** **(24)**

**स्त्रियन्नपानाति विचित्रपोकैः**
**सएवजाक्रत्परित्रुप्तिमेति ।** **(25)**

**स्वप्ने सचीवः चुक तुक्कपोक्ता**
**स्वमाय या कल्प्पित चीवलो के ।** **(26)**

**चुचुप्तिकाले चकले विलीने**
**तमोपिपूतः चुक रूप मेति ।** **(27)**

**पुनच्च जन्मान्तर कर्म योकात्**
**स एवचीवः स्वपिति प्रपुत्तः ।** **(28)**

**पुरतिर ये क्रीटति यच्च चीव**
**स्ततस्चु जातम् चकलम् विचित्रम्** **(29)**

**आतार मानन्त मकण्ट पोतम्**
**यस्मिन् लयम्यातिपुरतिरयञ्च** **(30)**

**ஸ ஏவமாயாபரி மோகிதாத்மா**
**சரீர மாஸ்தாய கரோதிசர்வம் ।** **(24)**

**ஸ்த்ரியந்நபாநாதி விசித்ரபோகை:**
**ஸஏவஜாக்ரத்பரித்ருப்திமேதி ।** **(25)**

**ஸ்வப்நே ஸசீவ: சுக துக்கபோக்தா**
**ஸ்வமாய யா கல்ப்பித சீவலோ கே ।** **(26)**

**சுசுப்திகாலே சகலே விலீநே**
**தமோபிபூத: சுக ரூப மேதி ।** **(27)**

**புநச்ச ஜந்மாந்தர கர்ம யோகாத்**
**ஸ ஏவசீவ: ஸ்வபிதி ப்ரபுத்த: ।** **(28)**

**புரதிர யே க்ரீடதி யச்ச சீவ**
**ஸ்ததஸ்சு ஜாதம் சகலம் விசித்ரம் ।** **(29)**

**ஆதார மாநந்த மகண்ட போதம்**
**யஸ்மிந் லயம்யாதிபுரதிரயஞ்ச ।** **(30)**

**एतस्माच्चायते प्राणोमनस्सर्वेन्त्रियाणिच**
**कम्वायुर्ज्योति रापचच प्रुत्वीविच्वस्यतारिणी**
**यत्परम् प्रम्म चर्वात्माविच्वस्यायतनम् मकत् ।**
**चूक्मात् चूट्चुमतरम् नित्यन्तत्वमेवत्वमेवतत्**
**जाक्रत्च्वप्नचुचुप्त्याति प्रपञ्चम्यत्प्रकाचते**
**तत्प्रम्माकमिति ञात्वा चर्वपन्तै: प्रमुच्यते ।**

**ஏதஸ்மாச்சாயதே ப்ராணோமநஸ்ஸர்வேந்த்ரியாணிச**
**கம்வாயுர்ஜ்யோதி ராபசச ப்ருத்வீவிச்வஸ்யதாரிணீ**
**யத்பரம் ப்ரம்ம சர்வாத்மாவிச்வஸ்யாயதநம் மகத் ।**
**சூக்மாத் சூட்சுமதரம் நித்யந்தத்வமேவத்வமேவதத்**
**ஜாக்ரத்ச்வப்நசுசுப்த்யாதி ப்ரபஞ்சம்யத்ப்ரகாசதே**
**தத்ப்ரம்மாகமிதி ஞாத்வா சர்வபந்தை: ப்ரமுச்யதே ।**

**(இதன் பொருள்)**

(24) (மேலே சொல்லிய மந்திரத்துக்குக் கீழ்க்கடை கோலினிடத்து நின்ற) ஆன்மாவானவன் மாயையினுலே மிகுதியும் மோக்கிக்கப் பட்டவனுய் ஸ்தூல சரீரம்பற்றி அனைத்தையுஞ் செய்கின்றுன்.

(25) அவ்வான்மா சாக்கிராவஸ்தையிலே ஸ்திரி அன்ன பானுதிகளாம் விசித்திர போகங்களினுலே (தூல சரீரயாய் நின்று) இன்புறுகின்றுன்.

(26) அந்தச் சீவான்மாவானவன் சொப்பனாவஸ்தையிலே சுவமாயையினாலே (சூக்கும சரீரியாய் நின்று) இன்ப துன்பம் நுகர்கின்றுன்.

(27) அவ்வான்மா வானவன் எல்லாம் ஒடுங்கிய சுழுத்தியிலே அஞ்ஞானத் தினுல் மூடுண்டு சுகரூப்த்தை அடைகின்றுன்.

(28) சென்மாந்தர கர்மங் கூடுதலால், அந்தச் சீவான்மாவானவன் பின்னர்ச் சுழுத்தியினின்றும் சொப்பனாவஸ்தையைச் சார்ந்து, (அதினின்று சாக்கிராவஸ்தையில் வந்து) விழிக்கின்றான்.

(29) தூல சூக்கும காரண தேகங்களிலே எந்தச் சீவான்மா விளையாடுகின்ருனே, அவனிலிருந்தே விசித்திரமாயுள்ள எதுவும் பிறந்ததாகும்.

(30) இதனுல் ஆதாரமாயும், ஆனந்தமாயும் அகண்டமாயுமுள்ள அந்தச் சீவான்மாவிலே முன்னர்த் தோன்றியதாகக் கூறிய மூன்று சரீரமும் லயமடைகின்றது.

(31. 32) இந்த ஆன்மாவிலிருதே பிராணன், மனம், சர்வேந்திரியங்கள், ஆகாயம், வாயு, அக்கினி, அப்பு, அஊத்தையுந் தாங்கும் பூமி என்பன பிறந்தன.

(33. 34) சர்வவியாபகமாயும், உலகத்துக்கோர் பெரிய ஆலயமாயும், நுண்ணியதினும் நுண்ணியதாயும் எந்தப் பிரமம் உளதோ, அந்தப் பிரமம் நீயே யாம் (ஆன்மாவேயாம்), நீயே (ஆன்மாவே) அந்தப் பிரமமாம்.

(35. 36) (ஆன்மா விசுவனுய்ச் சாக்கிரத்திலும், தைசசனுய்ச் சொப்பனத்திலும், பிராஞ்ஞனாய்ச் சுழுத்தியினும் நின்றபோது) எது (முறையே விராட்டாயும், சுராட்டாயும், சம்ராட்டாயும்) பிரகாசிக்கின்றதோ, அந்தப் பிரமம் நான் என்று (அருளினுல்) அறிந்து சர்வபாசங்களினின்றும் வீடுறுகின்ருன்.

## (திராவிட இரத்னப் பிரகாசிகை)

(35) ஆன்மா அம்பிகாசமேத சிவத்தோடு அருளினுலே ஐக்கியமா முறைமை - ஆன்மா சாக்கிராவஸ்தையிலே தூல விசுவனுய் நிற்குங்கால் சிவபிரான் தூல வைசுவரனரனுகிய விராட் புருஷனுய் நின்ருர். இந்த விராட் புருஷனுக்குத் தூலசரீரம் திரிலோகசராசரமா மென்க. ஆன்மா தேசகனுய்ச் சூக்கும சரீரமாய் நிற்குங்கால் சிவபிரான் சூக்கும சிருஷ்டியுடைய சூத்திரான்மாவாகிய சூக்குமசரீர இரணியகருப்பனாகின்ருர். ஆன்மாப் பிராஞ்ஞனுய்ச் சூக்குமதர சரீரியாய் நிற்குங்கால், சிவபிரான் சூக்குமதர சரீரியாய் உமாசமேதராகிய ஈசராய் நிற்கின்ருர் என்னும் உண்மையினுலே சிகரிணிமாலையுடையார்.

**अञ्ञान मायाप्याम् विच्वोजाक्रतवस्तायाम् स्वप्ने स्यात्तैजस:।**
**अवित्यामात्र साक्षित्वात् चम्प्रचातेप्राञ्ञोपवेत् ।**
**वैच्वानरोत्र पकवान् विराट् पुरुषउच्यते ।**
**चरीरम् यस्य निकिलम् त्रैलोक्यम् सचराचरम् ।**

**हिरण्य कर्प्पो जकताम् चूटचुमत्रुष्टेर् विवर्त्तिता ।**
**यतु पाते: प्राण कल्प्पम् चूत्रमाकुर् वेतवित: ।**
**विचुत्त सत्व विलचन्मायातिष्टानरचिक: ।**
**ईच्वरस्त्वेष पकवा नम्पिकार्त्ताङ् करुचिर: ॥**

**அஞ்ஞாந மாயாப்யாம் விச்வோஜாக்ரதவஸ்தாயாம் ஸ்வப்நே ஸ்யாத்தைஜஸ:।**
**அவித்யாமாத்ர ஸாக்ஷித்வாத் சம்ப்ரசாதேப்ராஞ்ஞோபவேத் ।**
**வைச்வாநரோத்ர பகவாந் விராட் புருஷஉச்யதே ।**
**சரீரம் யஸ்ய நிகிலம் த்ரைலோக்யம் ஸசராசரம் ।**
**ஹிரண்ய கர்ப்போ ஜகதாம் சூடசுமத்ருஷ்டேர் விவர்த்திதா ।**
**யது பாதே: ப்ராண கல்ப்பம் சூத்ரமாகுர் வேதவித: ।**
**விசுத்த ஸத்வ விலசந்மாயாதிஷ்டாநரசிக: ।**
**ஈச்வரஸ்த்வேஷ பகவா நம்பிகார்த்தாங் கருசிர: ॥**

என்று கூறினர். இந்தச் சுழுப்தி அவஸ்தையிலே சிவபிரான் சர்வஞ்ஞதாதி குணங்களினின்று பிரியாத சத்தியோடு இசைந்து நிற்கு முறைமை எவரும் அறிந்திலர் என்ற கருத்தினலன்றே சாந்தோக்கி யோபநிஷதமும்

**अत्रक्यस्यैते सत्या: कामा अन्रुतापितानास्तत् यतापिकिरण्य नितिम् निकितमक्षेत्रञ्ञा उपर्युपरि सञ्चरन्तो नविन्तेयु रेवमे वेमा: चर्वा: प्रजा अक रकर्कच चन्त्य एतम् प्रम्म लोकम् नविन्त न्त्यन्रुतेनति प्रत्यूटा: ॥**

**அத்ரக்யஸ்யைதே ஸத்யா: காமா அந்ருதாபிதாநாஸ்தத் யதாபிகிரண்ய நிதிம்நிகிதமக்ஷேத்ரஞ்ஞா உபர்யுபரி ஸஞ்சரந்தோ நவிந்தேயு ரேவமே வேமா: சர்வா: ப்ரஜா அக ரகர்கச சந்த்ய ஏதம் ப்ரம்ம லோகம் நவிந்த ந்த்யந்ருதேநதி ப்ரத்யூடா: ॥**

இந்த இதயத்தின் கண்ணே சத்திய காம முதலிய ஞான சத்தி குணங்கள் அவித்தையினலே மறைப் புண்டு கிடக்கின்றன, பொன்னின் படை ஒன்றின் மேலொன்று செறிந்து கிடக்கும் இரணியபண்டாரம் புலப்படாது நிலத்தினுள்ளே புதையுண்டு கிடப்ப, அதன் மீது அடிக்கடி சஞ்சாரஞ் செய்தும் அறிவிலிகள் அதனை அறியலுறுதவாறு போல, உள்ளக்குகையின் கண்ணே அமர்ந்த (மூலபண்டார) சிதாகாசத்தைப் பிரம்லோகத்தை நித்திராகா காலத்திலே எப்போதும் அணைந்து சுகித்துக்கொண்டு வந்தும், அசத்தியத்தினலே ஏய்ப்புண்டு அறிவிலிகள் இந்தப் பிரமலோகத்தை (சிதம்பரத்தை) க்கண்டாரில்லை" என்று கூறிற்று. இங்கே சுழுத்தி அவஸ்தையிலே உமை யம்மையோடு கூட மறைந்து நின்ற சிவபிரானே முன்னர் இருதய புண்டரீகத்தின் கண்ணே இருப்பவராகத் தியானிக்கப்படுபவராகக் கூறப்பட்டாரா மென்க. ஈண்டு சுழுத்தி அவஸ்தையிலே யிருப்பதாகப் பேசப்படும் பிரமம் ஏகான்மவாதிகளுடைய நிர்விசேஷப் பிரம்மன்றும் என்பதும், சிவாத்துவிதிகளுடைய சவிசேஷப் பிரமாம் என்பதும் பிரமாணங்களினலே வலியுறுத்தப்பட்டனவா மென்க. மாண்டுக்கி

யத்தின் சீவேசுர ஐக்கியம் நிருசிம்மோத்தரதாபநி யுபநிஷதத்திஞல் அறியப்படும் என்று சிகரிணிமாஃல செப்புகின்றது. ஆதலால் அம்மாண்டூக்கிய சுருதிப் பொருஊக் கூறிய இக்கைவல்லியோப நிஷதபாகமும் அந்த நிருசிம்மோத்தாதாபநி யுபநிஷதங் கொண்டே பொருள் படுத்த வேண்டும் மென்பது சித்தித்தது. இந்தத் தாபநியுபநிஷதம் சுழுத்தி அவஸ்தையிலே ஆன்மாவையும் பரமான்மாவையும் நிறுத்தி

**प्राञ्ज ईच्वरस्त्रुतीय परत: ।**

**ப்ராஞ்ஞ ஈச்வரஸ்த்ருதீய பரத: ।**

பிராஞ்ஞனும் ஈசுவரனும் மூன்ருவது பாதம் என்று கூறிற்று. பின்னரும் இந்தத் தாபநியுபநிஷதம்

**आत्मान मातायमनचा प्रम्मणैकीकुर्यात् ।**

**ஆத்மாந மாதாயமநசா ப்ரம்மணைகீகுர்யாத் ।**

ஞானசத்தியிஞல் ஆன்மாவை எடுத்துப் பரமான்மாவாகிய பிரமத்தோடு ஐக்கியஞ் செய்க என்று கூறிற்று. ஈண்டு “மனம்” என்றது ஐதரேய உபநிஷத பரிபாஷை யிஞலே ஞானசத்தியின் மேலாயிற்று.

**अयत्नेनैव जानाति तस्मात् चर्वञ्ज उच्यते!**
**चर्वात्मा परमै रेपिर्कुणैर्नित्य चमन्वयात्!**
**स्वस्मात् परात्म विरकात् परमात्मा चिव: स्वयम्!!**

**அயத்நேநைவ ஜாநாதி தஸ்மாத் சர்வஞ்ஞ உச்யதே!**
**சர்வாத்மா பரமை ரேபிர்குணைர்நித்ய சமந்வயாத்!**
**ஸ்வஸ்மாத் பராத்ம விரகாத் பரமாத்மா சிவ: ஸ்வயம்!!**

என்று கூறிற்று. இதஞல் ஈண்டுக் கைவல்லியோப நிடத மந்திரத்திஞலே “ஆன்மா” எனப்பேசப்பட்டவர் சர்வஞ்ஞதாதி குணங்களினின்று வேறுருத பரமான்மாவாகிய உமா சமேத சிவபதியேயாம் என்று உணரப்படும்.

(36) சிவமே தானெனநிற்றல் - சனற்குமார சங்கிதை

**विचिन्तयेत् स्वात्मनि चम्पुमीचम् चिवम् चान्तमु मात्वितीयम् ।**

**விசிந்தயேத் ஸ்வாத்மநி சம்புமீசம் சிவம் சாந்தமு மாத்விதீயம் ।**

யோகியானவன் தன்னறிவின் கண்ணே சம்புவும், ஈசரும், சாந்தரும், அருட்சத்தி யோடு கூடிய அதுல்லியருமாகிய சிவபிராஊச் சிந்திக்க கடவன் என்று கூறிற்று. இப்படிப்பாவிக்குமிடத்துப் பரமான்மாவாகிய சிவன் வேறு என்றும், ஆன்மாவாகிய

தான் வேறு என்றும் மோகத்தினுல் உபாசிப்பவனுக்குச் சிவத்துவம் எய்தாது என்றும், ஆதலால் சிவன் வேறு தான் வேறு என்னும் துவிதபாவஊ ஒழிந்து, சிவனே தான் என்னும்படி அத்வைத பாவஊனயை எக்காலமும் செய்யக்கடவன் என்று கொண்டு சிவயோகம் பேசுமிடத்திலே, சர்வஞானோத்தரசுருதி

**अकमात्मा चिवोक्यन्य: परमात्मेतिय: स्मिरुत: ।**
**एवमुपाचते मोकन् नचिवत्व माप्नुयात् ।**
**चिवान्यस्त्वक मेवान्य: प्रुतक्पापम् विवर्जयेत् ।**
**य: चिव: चोकमे वेत्यत् वैतम् पावयेत्चता ॥**

**அகமாத்மா சிவோக்யந்ய: பரமாத்மேதிய: ஸ்மிருத: ।**
**ஏவமுபாசதே மோகந் நசிவத்வ மாப்நுயாத் ।**
**சிவாந்யஸ்த்வக மேவாந்ய: ப்ருதக்பாபம் விவர்ஜயேத் ।**
**ய: சிவ: சோகமே வேத்யத் வைதம் பாவயேத்சதா ॥**

சொல்லுகின்றது என்று கூறிற்று, இந்தச் சுருதியின் பொருஊக்கொண்டே திராவிட செம்புகேசுவர புராணம்

**பேதமாகிய பாவஊ பேணுவ தெல்லா**
**மேதமாகிய பந்தமேயென தியானெனு மால்**
**போதவாருயி ரபேத பாவஊ புரிவஃதே**
**மாதராயுயிர் முத்தியென் றுரைத்திடு மறையும்.**

என்று கூறிற்று, இக்கைவல்லியோபநிஷதத்திலே ஆன்மாவே சிவம், சிவமே ஆன்மா என்பது பொருள்பட

**तत्वमे त्वम्मेवतत् ।**

**தத்வமே த்வம்மேவதத் ।**

அதுவே நீ, நீயே அது என "அத்துவிதங்" கூறியதின் பொருள் என்னையோ வெனில் சதுர்வேத தாற்பரிய சங்கிரகம்

**अत्वैतमाक मचितो पिरुपाच नायामुक्**
**तन्तवेति परमार्त्त तयानवाच्यम् ।**
**पेतस्पुटो करुट मान्त्रिकयोरळिकन् तातात्म्य**
**पावनमतापि विषम् प्रमार्षि ॥**

**அத்வைதமாக மசிதோ பிருபாச நாயாமுக்**
**தந்தவேதி பரமார்த்த தயாநவாச்யம் ।**
**பேதஸ்புடோ கருட மாந்த்ரிகயோரளிகந் தாதாத்ம்ய**
**பாவநமதாபி விஷம் ப்ரமார்ஷி ॥**

கருடனும் மாந்திரிகனும் தம்முள் வேறுதல் வெளிப்படையாயினும், கருடோகம் பாவஐன விஷத்தை நீக்கன் மாத்திரைக்கே வேண்டப்படும்; அதுபோல, பரமான்மா சீவான்மா என்னும் பதார்த்தங்கள் இரண்டும் தம்முள் வேறென்பது தேற்றமாயினும், உயிர்களுக்கு மல நீக்கத்தின் பொருட்டு ஈண்டு "ப்ரம்மாகம்" பாவஐன கூறப்பட்டது. இங்ஙனமாதலில் அது கொண்டுதானே நிருபசரிதைக்கியம் கூறுதல் சாலாது என்பது பெறப்படுகின்றது.

மாந்திரிகன் தனது சரீரத்தைக் கருடஞகப்பாவிப்பானல்லன், மற்றுப் பாவிக் குமாறு என்ஐனயெனில், அவன் தன் ஆன்மாவைக் கருடனுக்கு அதிதைவமாம் மந்திரரூபமாகப் பாவிப்பன், ஆண்டு எல்லாப் பொருளின் தருமங்களும் ஆன்மாவு க்குளவாம் என்னும் கருத்தால் சர்வஞானேத்தரசுருதி

## चर्वेतर्मा आत्मनस्सन्ति ।

**சர்வேதர்மா ஆத்மநஸ்ஸந்தி ।**

என்று கூறிய முடிந்த வார்த்தையால், தற்பாவ பாவமாய்ச் சார்ந்த தன் வண்ணமா மியல்புடைய ஆன்மா அந்த மந்திரதன்மியாய், மந்திரசொரூபியே யாவன்; அங்ஙனம் பாவஐன சத்திய பாவஐனயதலினன்றே, சத்தியபலமாக விஷநிவிர்த்தியா கா நிற்கும் என்று கூறிஞர் சிவஞான யோகிகளுமா மென்க. இவ்வாறு சத்திய பல மாகச் சிவோகம் பாவஐனயாகிய பிரம்மாகம் பாவனையினாலும் பாசமாகிய விஷம் நிவிர்த்தி யாகாநிற்கும் என்று ஒர்க.

(37) மாயையினுல் மோகிக்கப்படுவது ஆன்மா வன்றிப் பரமான்மாவன்று மென்பது - முப்பத்து மூன்றும் ஈசுவர தத்துவத்தினராகிய அனந்தேசுவரால் மாயையிலே யிருந்து பிறந்த கஐலகாலநியதி வித்தை ராகம் என்னும் ஐந்து தத்துவங்கஐளயும் ஆன்மா பஞ்சகஞ்சுகமாய்ப் பூண்டு புருஷனுய் (பசுவாய்) ப்போகங்கஐளப் புசிக்கின்றுன் என்று சிவபுராணங்களும் சிவாகமங்களும் செப்புகின்றமையானும் இந்தப் பஞ்சகஞ சுகமுடையனுய் நின்ற (வைதிக சைவருடைய) ஆன்மாவுக்கும் (சிவத்துக்கும்) மாயோபாதிப்பட்டுப் புருஷனுய் (பசுவாய்) நிற்கும் மாயாவாதிகளுடைய பிரமத்துக்கும் பேதமின்றும் என்ற கருத்தினுல், கைலாய சங்கிதை

**चर्वञ्ञ:चर्वकर्त्ताच चिव एवस्य मायया ।**
**चङ्कुचत्रूप इव सन्पुरुष: सम्पपूवक ।**
**कलातिपञ्चके नैवपोक्तिरुत्वेन प्रकल्प्पित: ।**
**इति स्तानत्व यान्तस्त: पुरुषोन विरोतक: ॥**

**சர்வஞ்ஞ:சர்வகர்த்தாச சிவ ஏவஸ்ய மாயயா ।**
**சங்குசத்ரூப இவ ஸந்புருஷ: ஸம்பபூவக ।**
**கலாதிபஞ்சகே நைவபோக்திருத்வேந ப்ரகல்ப்பித: ।**
**இதி ஸ்தாநத்வ யாந்தஸ்த: புருஷோந விரோதக: ॥**

முற்றறிவு முற்றுத் தொழிலுடைய ஆன்மா (சிவன்) சுவமாயையினுலே புருஷனுயினுன் (பசுவாயினுன்); அவ்வான்மாவே (சிவன்றனே) கலாதி பஞ்சகத்தி னுலும் போக்தாவாம் புருஷனுயினுன் (பசுவாயினுன்) (ஏகான்மவாதிகளுடைய) மாயோபாதி கற்பனை, (வைதிகசைவருடைய) கலாதி பஞ்சக கற்பனை என்னும் இருதிறத்தானும் எய்திய புருஷன் (பசு) வேறுபாடிலன் என்று முடித்துக் கூறியது. இவற்றின் விரிவைக் கைலாச சங்கிதையிலும், நாம் எழுதிய "சென்னை ஆரியனுர் பிரமம் பரப்பிரமமாகாத சீவப்பிரமம்: என்னும் சிறு புஸ்தகத்திலும் காண்க. இதனுல் மாயாவாதோபநிஷதங்களிலே மாயோபாதிப் பட்டுப் பசுவாய் நிற்கும் பிரமம் ஆன்மா என்க; அங்ஙனம் மாயோபாதிப் பட்டுப் பசு வாய்ப்போதராத யிரமம் சிதம்பர்வாதோப நிஷதங்களிலே தரும தருமி சம்பந்தமாகிய சமவாயத்தினுலேனும் தாதான்மியத்தினுலேனும் சிவசத்தியை ஒர்காலும் பிரியாத பரப்பிரம சிவமேயாம் என்ற கருத்தினுல், சிவபுராணம்

**अपरेतु पराचक्ति: चिवस्य चमवायिनी ।**
**तातात् म्यमनयोर्नित्यम् वन्निताककयोरिव ।**
**अतस्तत्तर्म तर्मित्वात् पराचक्ति: परात्मन: ॥**

**அபரேது பராசக்தி: சிவஸ்ய சமவாயிநீ ।**
**தாதாத் ம்யமநயோர்நித்யம் வந்நிதாககயோரிவ ।**
**அதஸ்தத்தர்ம தர்மித்வாத் பராசக்தி: பராத்மந: ॥**

சூரியனுடைய கிரணம் போலப் பராசத்தி சிவபிரானுடைய சமவாயசத்தி என்றும், குணகுணி பாவத்தினால் பராசத்திக்கும் பரமான்மாவுக்கும் உள்ள சம்பந்தம் அக்கினியும் சூடும் போல நித்தியமாகிய தாதான்மிய சம்பந்தமாம் என்றுங் கூறியதா மென்க. இதனுல் மாயையினுலே மோகிக்கப்பட்டுச் சாக்கிராவஸ்தையிலே தூலபோக முதலிய புசிக்கப் போந்தவன் ஆன்மாவன்றிப் பரமான்மாவாகிய சிவசத்தி சமேத சிவபிரானல்லரா மென்க. இந்த மாயோபாதிப்பட்ட ஆன்மா பிரமம் எனவும், ஈசன் எனவும், சம்பு எனவும், சிவன் எனவும், ஆங்காங்கு புராணங்களினும் உபநிஷதங்களினுஞ் சொல்லப்படும் ஆன்மாவையும், இப்பெயர் ஒற்றுமை வாயிலாக ஆன்மா எனவும், பிரமம் எனவும், ஈசன் எனவும், சம்பு எனவும், சிவன்

எனவும் பேசப்படும் பரமான்மா வாகிய சிவபிரானையும் ஒன்றுபடுத்தி விவேகிகள் கலக்கா திருப்பாராக.

---

**X.**

(பிரமா ஆசுவலாயனர்க்கு விபூதியோகமாகிய சிவாத்துவிதம் உபதேசித்தமை)

**त्रचुतामचुयत् पोक्यम् पोक्ता**
**पोकच्च यत्पवेत् ।** (37)
**तेप्योविलक्ष: चाक्षि चिन्मात्**
**रोकम् चताचिव: ।** (38)
**मय्येव सकलम् जातम्मयि**
**चर्वम् प्रतिष्टितम् ।** (39)
**मयिचर्वम् लयम्याति तत्**
**प्रम्मात्वय मस्म्यहम् ।** (40)
**अणोरणीया नकमेव तत्वन् महानहम्**
**विस्वमहम् विचित्रम् ।** (41)
**पुरात नोहम् पुरुषो कमीचो हीरण्**
**मयोकम् चिवरूप मस्मि ।** (42)
**अपाणि पातोह मचिन्त्य चक्ति: पच्याम् यचट्चु:**
**सच्रु णोम्य कर्ण: ।** (43)
**अहम् विजा नामि विविक्त रूपो**
**नचास्ति वेत्ता ममचित् चताहम् ।** (44)
**वेतैर ने कैरहमे ववेत्यो**
**नचास्ति वेत्ता ममचित् चताहम् ।** (45)
**नपुण्य पापे मम नास्ति नाचो**
**नजन्मते केन्त्रिय पुत्तिरस्ति ।** (46)
**नपूमिरा पोनचवन् निरस्ति**
**नचानिलो मेस्तिनचाम् पाञ्च ।** (47)
**एवम् वितित्वा परमात्म रूपम्**
**कुकाचयम् निष्कळ मत्विती यम् ।** (48)

चमस्त चाक्षिम् चतचत् विकीनम्
प्रयाति चुत्तम् परमात्म रूपम् । (49)

த்ருசுதாமசுயத் போக்யம் போக்தா
போகச்ச யத்பவேத் । (37)
தேப்யோவிலக்ஷ: சாக்ஷி சிந்மாத்
ரோகம் சதாசிவ: । (38)
மய்யேவ ஸகலம் ஜாதம்மயி
சர்வம் ப்ரதிஷ்டிதம் । (39)
மயிசர்வம் லயம்யாதி தத்
ப்ரம்மாத்வய மஸ்ம்யஹம் । (40)
அணோரணீயா நகமேவ தத்வந் மஹாநஹம்
விஸ்வமஹம் விசித்ரம் । (41)
புராத நோஹம் புருஷோ கமீசோ ஹீரண்
மயோகம் சிவரூப மஸ்மி । (42)
அபாணி பாதோஹ மசிந்த்ய சக்தி: பச்யாம் யசட்சு:
ஸச்ரு ணோம்ய கர்ண: । (43)
அஹம் விஜா நாமி விவிக்த ரூபோ
நசாஸ்தி வேத்தா மமசித் சதாஹம் । (44)
வேதைர நே கைரஹமே வவேத்யோ
நசாஸ்தி வேத்தா மமசித் சதாஹம் । (45)
நபுண்ய பாபே மம நாஸ்தி நாசோ
நஜந்மதே கேந்த்ரிய புத்திரஸ்தி । (46)
நபூமிரா போநசவந் நிரஸ்தி
நசாநிலோ மேஸ்திநசாம் பாஞ்ச । (47)
ஏவம் விதித்வா பரமாத்ம ரூபம்
குகாசயம் நிஷ்கள மத்விதீ யம் । (48)
சமஸ்த சாக்ஷிம் சதசத் விகீநம்
ப்ரயாதி சுத்தம் பரமாத்ம ரூபம் । (49)

(இதன் பொருள்)

(37) தூல சூக்கும காரணதேக மூன்றினும், முறையே எது போக்கியமாயும், போக்தாவாயும், போகமாயுமாயிற்றோ,

(38) அம்மூன்றிற்கும் விலக்ஷணமாகிய (வேறாகிய) சாட்சியாய், அறிவு மாத்தி ரமாயுள்ள "நானே அந்தச் சதாசிவப் பிரமம்"

(39) என்னிலிருந்தே யாவும் உண்டாயிற்று. என்னிலே யாவும் நிலைத்தது.

(40) என்னிலே யாவும் ஒடுங்குகின்றது. அத இரண்டாவதற்ற பிரமும் நானே.

(41) அணுவுக்கணுவாய் இருக்கும் சிவனார் நானுதல் போல, மகத்துக்கு மகானாகிய சிவனாரும் நானே, விசித்திரமாகிய உலகமும் நானே.

(42) பழையேனும் நானே. பொன்மயமானவரும் நானே. சிவரூபம் நானே.

**(43)** கைகால் இலாதவரும் நானே. அவரது நிஜனத்தற்கரிய சத்தியும் நானே. கண்ணில்லாமற் பார்க்கிறேன் காதில்லாமற் கேட்கிறேன்.

**(44)** ஏகரூபமுடையனல்லேன், என்ஜன அறிபவன் இல்ஜல. எக்காலமும் சிவஞானரூபியாவிருக்கின்றேன்.

**(45)** அநேக வேதங்களிஞலே நானே அறியப்பட்டேன். வேதாந்தஞ் செய்தவனும் நான். வேதத்தை அறிந்தவனும் நான்.

**(46)** எனக்குப் புண்ணியபாபம் இல்ஜல. எனக்கு நாசம் இல்ஜல.

**(47)** நான் பூமி அல்லேன். அப்பு அல்லேன். அக்கினி அல்லேன். ஆகாயமல் லேன்.

**(48)** என்றிவ்வாறு உள்ளக் குகையின் கண்ணே நிஷ்களமாயும் அத்துவிதமாயு முள்ள பரமான்ம சொரூபத்தை அறிந்து,

**(49)** சமஸ்தசாட்சியும், சதசத்துக்கு (பசுபாசங்களுக்கு) வேறுனவராயும், சுத்தராயுமுள்ள பரமான்ம சிவரூபத்தை அடைகின்றுன்.

## (திராவிட இரத்னப் பிரகாசிகை)

**(38)** விபூதியோகம் - பாசுபதம், பிரதம், சிரோவிரதம், அத்தியாசிரமம், சாம்பவம், ஐசுவரம் என்பன பாசுபத விரதத்துக்குப் பெயராகச் சூதசங்கிதையிலே கூறப்பட்டிருக்கின்றன. இதஞல் பசுமம், ஐசுவரியம், ஐசுவரம் என்பனவும் (பாதாதி கேசாந்தம் அக்கினி முதலிய மந்திரங்கொண்டு தரிக்கப்படும்) விபூதி விரதமாகிய பாசுபத விரதத்துக்குப் பெயராமென்க. இந்த விபூதி விரதாநுஷ்டானம் வாயிலாக உமாசமேதராகிய சிவபெருமான் தியானிக்கப்படுங்கால், இந்த யோகம் பாசுபத யோகம் எனப்படுமென்க. இது பற்றியே லிங்கபுராணம்

**चर्ववे ताकमाम् पोजमकरन्तच मत्यमे ।**
**पीत्वायो कम्रुतम् योकीमुच्यते प्रम्मवित्तम: ।**
**एवम् पाचुपतम् योकम् योकैच्वरिय मनुत्तमम् ।**
**अत्याचिरममितम् योकम् योकैच्वरिय लप्यते ॥**

**சர்வவே தாகமாம் போஜமகரந்தச மத்யமே ।**
**பீத்வாயோ கம்ருதம் யோகீமுச்யதே ப்ரம்மவித்தம: ।**
**ஏவம் பாசுபதம் யோகம் யோகைச்வரிய மநுத்தமம் ।**
**அத்யாசிரமமிதம் யோகம் யோகைச்வரிய லப்யதே ॥**

“சர்வ வேதாகமம் என்னும் கமல மலரின் கண்ணேயுள்ள மகரந்தமாகிய யோகாமிர்தத்தைப் பிரமவித்தாகிய யோகி பானஞ் செய்து பாசத்தினின்று விடுபடு கின்றுன். பாசுபதயோகமானது உத்தமமாகிய யோகைசுவரியமேயாம் (விபூதியோக மேயாம்); இந்த யோகம் அத்தியாச்சிரம யோகம் எனப்படும். இந்த விபூதியோகம் எவருக்குத்தான் எய்தப் பெறும்” என்று கூறுகின்றது. இதஞல், ஐசுவரியம் ஐசுவரம் என்பன விபூதியின் பரியாய நாமங்களாய் முடிய, பாசுபத யோகம் விபூதி யோகம்

எனப்பட்டதாயிற்று. இந்த விபூதி என்னும் பெயர் அப்பிராகிருதியாகிய பராசத்திக்குப் பெயராம் என்ற கருத்தினாலன்றோ, சிவபுராணம்

**யதோவாசோ நிவர்த்தந்தே மநசா சேந்தரியை ஸ்ஸஹ ।**
**அப்ராக்ருதீ பராசைஷா விபூதி: பாரமேச்வரீ ।**
**சைவேஹ பரமந்தாம சைவேக பரமாகதி: ।**
**சைவேக பரமா காஷ்டா விபூதி: பரமேஷ்டிந: ॥**

எங்கிருந்து மனசும் வாக்கும் இந்திரியங்களோடு கூடச்செல்லமாட்டாவாய் மீண்டு விடுகின்றனவோ அப்படிப்பட்ட அப்பிராகிருதியாம் விபூதியானது பராசத்தியேயாம். இந்தப் பராசத்தி விபூதியே பரமாகிய வீடு; இதுவே பரமாகியகதி; இதுவே பரமாகிய முடிந்த எல்லை; இதுவே பரமசிவனார் விபூதியாம் என்று கூறிற்று. இதனால் விபூதியோகம் என்பது (கூர்மபுராணம் மூன்றாவது பாவனையாகக் கூறிய) பிராம்மி யோகம் என்பதுமாயிற்று. விபூதியானது பராசத்திசொரூபமானமையாலன்றோ, ஸ்ரீஞான சம்பந்த வள்ளலாரருளிய “மந்திரமாவது நீறு” என்னுந் திராவிட சூக்தத்தைப் “பரையின் வரலாறு” என்று கூறியருளினார் அகஸ்திய மகாமுனி வருமாமென்க. இந்த விபூதியோகத்தினாற் சிவபிரான் அடையப்படுவாரன்றி மற்றைச் “சாமர்த்தியத் தினாலும், புத்தியினாலும், மிகுந்த கேள்வியினாலும் எய்தப் பெறார்” என்ற கருத்தினால் விபூதி நிஷதங்களாகிய முண்டகோபநிஷதமும் கடவல்லியுபநிஷதமும்

**नायमात्मा प्रवचने नलप्योनमेतया नपकुनाच्रुतेन ।**

**நாயமாத்மா ப்ரவசநே நலப்யோநமேதயா நபகுநாச்ருதேந ।**

என்று கூறியவாமென்க. மேலே கூறிய லிங்கபுராணப் பொருளையும் இச்சுருதிப் பொருளையும் இசைத்துப் பார்க்குங்கால் அவை ஒரு நெறிப்பட விபூதியோகம் உடையார்க்கே சிவபிரான் எய்தப் பெறுவார் என்பது உபதேசித்தனவாமென்க. மேலும், அம்முண்டகோபநிஷதமும் கடவல்லியுபநிஷதமும் எந்தப் பரமான்மா வாகிய சிவத்தை (அறிஞனாய) இவன் அடைய அன்புறுகின்றானோ, அவன் அவ்வன்பினாற்றானே இந்தப் பரமான்மாவாகிய சிவபிரான் எய்தப்பெறுகின்றார். அவனுக்கு இந்தச் சிவனார் தமது சொரூபத்தை அருளுகின்றார் என்ற கருத்தினால்

**யமேவைஷ வ்ருணுதே தேநலப்யஸ் தஸ்யைஷ ஆத்மா**
**விவ்ருணுதே தநூக்ம்ஸ்வாம் ।**

என்று கூறிற்று. இந்தப் பாசுபதயோக வித்தையிலே சித்தி பெற்றவர் வாமதேவர், கிருஷ்ணர், அகஸ்தியர், விசுவாமித்திரர் முதலாயினோர் என்பது பொருள்படச் சைவ பாஷ்யகாரர் தமது சிவாத்துவித வேதசூத்திர சைவபாஷ்யத்து “உபய லிங்காதிகரண த்திலே” கூறியிருக்கின்றார். இந்த வாமதேவர், கிருஷ்ணர், விசுவாமித்திரர், அகஸ்தியர் என்போர் தங்கள் இடைவிடாத சிவோக்ம்பாவனைத் தியான யோகத்தினாலே பரப்பிரம சிவாவிர்ப்பாவமாய் அசாதாரணகுணங்கள் பிரகாசிக்கப்

பெற்ருர்கள். இதனுலன்றே, பிருகதாரணியோபநிஷதத்திலே வாமதேவர் "நான் மனு, நான் சூரியன்" என்று கூறியதாகப் பொருள்கொண்ட

**अकम् मनुरपवन् चूर्यच्च ।**

**அகம் மநுரபவந் சூர்யச்ச ।**

என்னும் மந்திரங் காணப்படுகின்றது. கிருஷ்ணர் அர்ச்சுனரை நோக்கி, "அர்ச்சுனு! உனக்கு அருட்கண் கொடுக்கின்றேன். ஆனுல் நீ எனது பாசுபதயோகப்பயனை (விபூதியோகப் பயனை)க் காண்பாயாக என்ற கருத்தினுல்,

**तिव्नततामि तेचट्चु: पच्यमे योकमैच्वरम् ।**

**திவ்ந்ததாமி தேசட்சு: பச்யமே யோகமைச்வரம் ।**

என்று கூறினுர். மேலும், கிருஷ்ணர் அர்ச்சுனு, சர்வபூதங்களுக்கும் விதையாய் (காரணமாய்) எது உளதோ அது நான், (சராசர) பூதமாய் எது இருக்கின்றதோ, அது என்னையன்றி யில்லை என்ற கருத்தினுல்,

**तिव्नततामि तेचट्चु: पच्यमे योकमैच्वरम् ।**

**திவ்ந்ததாமி தேசட்சு: பச்யமே யோகமைச்வரம் ।**

என்று கூறினுர். மேலும், கிருஷ்ணர் அர்ச்சுனு, சர்வபூதங்களுக்கும் விதையாய் (காரணமாய்) எது உளதோ அது நான், (சராசர) பூதமாய் எது இருக்கின்றதோ, அது என்னையன்றி யில்லை என்ற கருத்தினுல்

**यच्चापि चर्वपूतानाम् पीजततेह मर्च्चुन ।**
**नततस्ति विनायत्स्यात् मयापूतञ् चराचरम् ॥**

**யச்சாபி சர்வபூதாநாம் பீஜதேதஹ மர்ச்சுந ।**
**நததஸ்தி விநாயத்ஸ்யாத் மயாபூதஞ் சராசரம் ॥**

என்றற் றெடக்கத்தனவாகக் கூறிய உண்மைகளை உபதேசித்து, அங்ஙனம் உபதேசித்தவாறே தமது விசுவரூபத்தை அவ்வர்ச்சுனருக்குத் தரிசிப்பிக்க, தாம் அருளிய அருட்கண் கொண்டு தம்மை நோக்கச் செய்த போது அர்ச்சுனர் "விசுவேசுரரே, விசுவரூபரே, அநேக கைகளும், வயிறுகளும், முகங்களும், கண்களுமுள்ள அனந்தரூபராகிய உம்மை எவ்விடத்தும் பார்க்கின்றேன். உம்முடைய ஆதியைக் கண்டிலேன்" என்றற் றெடக்கத்தனவாகத் துதித்தாராக மகாபாரதம் கூறுகின்றது. விசுவாமித்திரர் ஒர் கால் மற்ருேர் சுவர்க்கத்தைப் படைக்கும் வன்மையுடையராயினுர். அகஸ்தியர் ஒர்கால் சலத்தைப் பானஞ்செய்ய வன்மையுடையராயினுர். இந்த விபூதியோகத்தைப் பாசுபதயோகோபநிஷத் மந்திரப்

பொருள் கொண்டு சிவராகவ சம்வாதத்திலே சிவனுர் உபதேசித்திருக்கின்றுர். எந்தெந்தச் சுருதிகளைச் சிவனுர் எடுத்து ஸ்ரீ ராமருக்கு "எல்லாந் தாமே" என்பது போதா உபதேசித்திருக்கின்றுரோ, அவ்வாறு பாசுபதயோகியாகிய பிரமதேவரும் அந்த விபூதியோகத்தை அவ்வாறே ஆசுவலாயன முனிவர்க்கு உபதேசித்தாராகக் கைவல்லியோபநிஷதத்தினுல் அறியப்படுகின்றது.

**A.** மாண்டுக்கியோபநிஷதப் பொருள் கொண்டு ஆன்மாவும் சிவமும் (முன்னரே மேலே கூறியவாறு) அபேதமாய் ஐக்கிய பாவனை யுற்று நின்ற நிலை (27-வது) மந்திரபாகத்தினுல் சூசிக்கப்படுகின்றது.

**B.** (சராசர) பூதங்களெல்லாம் எதினின்று தோன்றி நின்று ஒடுங்குகின்றனவோ அந்தப் பிரமத்தை அறிக என்னுங் கருத்தினுல்,

**य तोवा इमानि पूतानिजायन्ते ।**
**येन जातानि चीवन्ति ।**
**यत् प्रयन्त्यपि चम्विचन्ति ।**
**तत् विचिञ्ञा चस्व ॥**

**ய தோவா இமாநி பூதாநிஜாயந்தே ।**
**யேந ஜாதாநி சீவந்தி ।**
**யத் ப்ரயந்த்யபி சம்விசந்தி ।**
**தத் விசிஞ்ஞா சஸ்வ ॥**

என்னும் தைத்திரீய சுருதியும், (சராசரமாகிய) பூதமெல்லாம் ஆகாயத்திலே தோன்றி (நின்று) ஒடுங்குகின்றன என்ற கருத்தினுல்

**चर्वाणिहवा इमानि पूतान्याकाचातेव चमुत्पत्यन्त**
**आकाचम् प्रत्यस्तम् यन्ति ।**

**சர்வாணிஹவா இமாநி பூதாந்யாகாசாதேவ சமுத்பத்யந்த**
**ஆகாசம் ப்ரத்யஸ்தம் யந்தி ।**

என்னுந் சாந்தோக்கிய சுருதியும்: இச் (சராசர) பூதங்களெல்லாம் ஆனந்தத்திலே தோன்றி நின்று ஒடுங்குகின்றன என்ற கருத்தினால்,

**आनन्तात्येव कल्विमानि पूतानि जायन्ते ।**
**आनन्तेन जातानि चीवन्ति ।**
**आनन्तम् प्रयन्त्यपि सम्विचन्ति ।**

**ஆநந்தாத்யேவ கல்விமாநி பூதாநி ஜாயந்தே ।**
**ஆநந்தேந ஜாதாநி சீவந்தி ।**
**ஆநந்தம் ப்ரயந்த்யபி ஸம்விசந்தி ।**

என்னுந் தைத்திரீய சுருதியும் கூறியவாறு, ஆனந்தாகாசமாகிய சிதம்பர சத்தியினின்று வேறுருத சிவமாகிய பிரமத்தோடு ஆன்மா அபேதமாய் நின்ற ஐக்கிய பாவனை நிலை, "என்னிலிருந்தே யாவும் உண்டாயிற்று" என்றற் றெடக்கத்த கைவல்லியத்தின் (39-ம்) சுருதியினுல் உணர்த்தப்படுகின்றது.

சிவோகம்பாவனையினுலே சிவாவிர்ப்பாவ முற்ற பாசுபத யோகிகளே தாமும் சிவமும் வேறற நின்றமையால், அவ்வாறு கூற வல்லுநராகின்முர் என்ற கருத்தினுலன்றே, சர்வ ஞானோத்தர சுருதி மேலே சொல்லிய கைவல்லியத்து (39-ம் 40-ம்) சுருதிகளுக்கிசைய "நானே உலகத்துக்கு நாதன், என்னுலே எல்லாம் பிரகாசிக்கின்றது, நாரதத்த்துவ முதல் பிருதிவியந்தமாயுள்ள தத்துவமெல்லாம் என்னின்றே நிலையிறுகின்றன. அகத்தும் புறத்துமாகக் காணப்படுவதாயேனும் கேட்கப்படுவதாயேனும் பிரபஞ்சத்தில் எவ்வளவு நிண்ணியதாய் எது எது உளதேனும் அததுவெல்லாம் என்னுலே வியாபிக்கப்பட்டது. சிவன் வேறு நான் வேறு என்னும் துவித பாவனையை விட்டு எந்தச் சிவயோகியும் அத்துவித பாவனை செய்யக்கடவன்" என்ற கருத்தினுல்,

**अकमेव जकन्नातो मत्तस्सर्वम् प्रकाचते ।**
**चिवात्यवनि पर्यन्तन् तत्चर्वम् मयि सम्स्तितम् ।**
**यत्किञ्चिजज कत्यस्मिन् त्रुच्यते च्रूयतेपिवा ।**
**पकिरन्तर् लिपाकेन तत्चर्वम् व्यापतम् मया ।**
**चुवान्य स्त्वह मेवान्य: प्रुतक्पावम् विवर्चयेत् ।**
**य: चिव: चोकमे वेत्यत् वैतम् पावयेत्सता ॥**

**அகமேவ ஜகந்நாதோ மத்தஸ்ஸர்வம் ப்ரகாசதே ।**
**சிவாத்யவநி பர்யந்தந் தத்சர்வம் மயி ஸம்ஸ்திதம் ।**
**யத்கிஞ்சிஜஜ கத்யஸ்மிந் த்ருச்யதே ச்ரூயதேபிவா ।**
**பகிரந்தர் லிபாகேந தத்சர்வம் வ்யாபதம் மயா ।**
**சுவாந்ய ஸ்த்வஹ மேவாந்ய: ப்ருதக்பாவம் விவர்சயேத் ।**
**ய: சிவ: சோகமே வேத்யத் வைதம் பாவயேத்ஸதா ॥**

என்று கூறிற்று. (ஆனந்த) ஆகாசமானது பராசத்தியாம் என்ற கருத்தினுலன்றே, கூர்ம புராணம் "சிவபிரானுடைய பராசத்தி ஆகாசம் என்னும் பெயர் பெறுவர்" என்ற கருத்தினுல்

**यस्यचा परमातेवी चक्तिराकाच चम्ञिता ।**

**யஸ்யசா பரமாதேவீ சக்திராகாச சம்ஞிதா ।**

என்றற் றெடக்கத்தனவாகச் சாங்கியயோகம் எனப்படும் நிர்க்குண பாவனையிலே முடித்துப் பேசிய ஏகமாம் ஆன்ம நிலையையும் மேலே கைவல்லியோபநிஷதமும் சர்வஞான சுருதியும் பிறவுங் கூறிய உமாசமேத சிவனுரோடு ஆன்மா நின்ற ஐக்கிய பாவனு நிலையையும் ஒன்றென்று சாஸ்திரவுணர்ச்சி அறந்த விவேகிகள் விபரீதப் படுத்தி ஓர் போதும் உணரா ரென்க.

**C.** அணுவுக்கணுவும் மகத்துக்கு மகத்துமாயுள்ள சிவபிரானைச் சிவப்பிரசாதத்தினுலே அறிதல் வேண்டும் என்ற கருத்துக்கொண்ட

**अणोरणियान् मकतोमकीयनात्मास्य जन्तोर्निकितो कुकायाम् ।**

**அணோரணியாந் மகதோமகீயநாத்மாஸ்ய ஜந்தோர்நிகிதோ குகாயாம் ।**

என்னுங் கடவல்லியுபநிஷதமும், மகாநாராயணேபநிஷதமும் கூறும் மந்திரப் பொருள் கொண்டு சாதிக்கப்படும் சிவசீவபாவனுபேத ஐக்கியநிலை கைவல்லியோ பநிஷதத்து (41-வது) மந்திரத்துள்ள அணுவு கணுவானவனும் நானே என்னும் சுருதி யினுல் உரைக்கப்பட்டது.

**D.** சிவபிரான் பிறவாதவர், பெரியர், நித்தியர் என்ற கருத்தினுல்

**अज आत्मा मकान् त्रुव: ।**

**அஜ ஆத்மா மகாந் த்ருவ: ।**

என்னும் பிருகதாரண்ணியோபநிஷதமும், "பிரகிருதி மண்டலத்துக்கு மேலாம் விசுவரும் பழையோருமாம் சிவபிரான்" என்ற கருத்தினுல்

**विच्वम् पुराणन्तमच: परस्तात् ।**

**விச்வம் புராணந்தமச: பரஸ்தாத் ।**

என்னும் மகோசநிஷதமும், "சூரிய மத்தியிலே இரண்மயராகிய புருஷராகிய சிவபிரான் காணப்படுகின்றுர்" என்ற கருத்தினுல்

**यएषोन्त रातित्ये किरणमय: पुरुषोत्रुच्यते ।**

**யஏஷோந்த ராதித்யே கிரண்மய: புருஷோத்ருச்யதே ।**

என்னுந் சாந்தோக்கியோபநிஷதமும் கூறும் சுருதிகள் கொண்டு, ஆன்மாவும் (சிவ சத்தி சமேதராகிய) சிவமும் அபேதமாய் நிற்குநிஜல கைவல்லியோபநிஷதத்து (41-ம் 42-ம்) சுருதிபாகங்களினுலே உணர்த்தப்பட்டது.

**E.** கையின்றிப் பற்றுகின்றவரும், காலின்றிச் செல்பவரும், கண்ணின்றிப் பார்க்கின்றவரும், காதின்றிக் கேட்பவருமாயுள்ளார் சிவபிரான்; அவர் அறியப்படாத தை அறிகின்ருர்; அவரை யாரும் அறிந்திலர்" என்னுங் கருத்தினுல்

**अपाणिपातो जवनोक्कु कीतापच्यत्यचट्चु: सच्रुणोम्य कर्ण: ।**
**सवेत्ति वेत्यम् नचतस्यास्तिवेत्ता ॥**

**அபாணிபாதோ ஜவநோக்கு கீதாபச்யத்யசட்சு: ஸச்ருணோம்ய கர்ண: ।**
**ஸவேத்தி வேத்யம் நசதஸ்யாஸ்திவேத்தா ॥**

என்னும் சுவேதாசுவதரோபநிஷதமும், "நிஜனத்தற்கரியரும் அளத்தற்கரியரும் ஆதி மத்தியாந்தமிலாதவரும் சிவபிரான்" என்ற கருத்தினுல்

**अचिन्त्यायाप्रमेया यानाति नितनाय ।**

**அசிந்த்யாயாப்ரமேயா யாநாதி நிதநாய ।**

என்னும் மைத்திராயணோபநிடதமும், "எல்லாவேதங்களும், இந்தப் பிரணவப் பொரு ளாகிய சிவத்தை அறிகின்றன" என்ற கருத்தினுல்

**चर्वे वेतायत् पतमा मनन्ति ।**

**சர்வே வேதாயத் பதமா மநந்தி ।**

என்னுங் கடவல்லி சுருதியும், சிவபிரான் ஏகரும், வெளிப்படாதவரும், (விவிக்தரூப ரல்லர்) அனந்தரூபருமாயுள்ளார்" என்ற கருத்தினுல்

**यतेकमव्यक्त मनन्त रूपम् ।**

**யதேகமவ்யக்த மநந்த ரூபம் ।**

என்னும் மகோபநிஷதமும், சிவபிரான் மகாமாயையின் கண்ணே விசுத்தமாகிய அநேக சரீரங்கஜள எடுப்பார் என்ற கருத்தினுல்

**स्तिरेपिरङ्कै: पुरुरूप उक्र: ।**

**ஸ்திரேபிரங்கை: புருரூப உக்ர: ।**

என்னும் இருக்குவேதமும், சித்துரூபியும் முடிவில்லாதவருமாயுள்ளவர் சிவபிரான் என்ற கருத்தினுல்

**चत्यम् ञान मनन्तम् प्रम्म ।**

**சத்யம் ஞாந மநந்தம் ப்ரம்ம ।**

என்னுந் தைத்திரீயமும், மகானாகிய சிவபிரானிலிருந்தே இருக்காதி வேதங்களும் உபநிஷதங்களும் தோன்றின என்ற கருத்தினுல்

**अस्य मकतो पूतस्यनि: च्वचितमेतत् रुक्वेत: ……….. उपनिषत: ।**

**அஸ்ய மகதோ பூதஸ்யநி: ச்வசிதமேதத் ருக்வேத: ………. உபநிஷத: ।**

என்னும் பிருகதாரணியோபநிஷதமுங் கூறிய சுருதிப்பொருள் கொண்டு உணர்த்தப்படும் சீவான்ம பரமான்ம ஐக்கிய நிலை கைவல்லியோபநிஷதத்து (43. 44. 45-ம்) சுருதிப் பாகங்களினாலே சாதிக்கப்படுகின்றது.

**F.** இங்ஙனம் மேலே சொல்லியவாறு சிவத்தோடு ஆன்மா ஐக்கியமுற்று நிற்குங்கால் சிவனுடைய சர்வஞ்ஞதாதி குணங்களெல்லாம் ஆன்மாவில் விளங்கப் பெற்றுத் தான் சிவசாமியம் அடைகின்ருன். இதுவே சிவத்துவம் எனப்படும் என்று நீலகண்ட சிவாசாரியர் கூறியவாறே சர்வஞ்ஞதை, திருப்தி, அநாதிபோதம், அலுப்த சக்தி, அனந்தசக்தி, சுவதந்திரத்துவம், நிராமயான்மா, விசுத்த தேகம் என்னும் சிவகுணங்கள் விளங்கப்பெற்று ஆன்மா சிவத்துவத்தை அடைகின்ருன் என்ற கருத்தினுல்

**चर्वञ्अता त्रुप्ति रनातिपोत स्वतन्त्रतानित्यमलुप् चक्ति: ।**
**अनन्तचक्तिच्च निरामयात्मा विचुत्ततेक: चचिवत्वमेति ॥**

**சர்வஞ்ஞதா த்ருப்தி ரநாதிபோத ஸ்வதந்த்ரதாநித்யமலுப் சக்தி: ।**
**அநந்தசக்திச்ச நிராமயாத்மா விசுத்ததேக: சசிவத்வமேதி ॥**

என்னும் சர்வஞானோத்தரசுருதி கூறுகின்றமையாலும், "முக்தன் சிவசமமாகின்ருன்" என்னுங் கருத்தினுல்

**मुक्त: चिवचमो पवेत् ।**

**முக்த: சிவசமோ பவேத் ।**

என்று சிவபுராணங் கூறுகின்றமையாலும், இவற்றிற்கிசையவே இப்படிப்பட்ட முக்தன் (வித்வான்) புண்ணியபாபங்கள் தீர்ந்தவனுய், நிரஞ்சனனுய், சிவசாமியத்தை அடைகின்ருன் என்னுங் கருத்தினுல்

**ततावित्वार् पुण्यपापे वितूय निरञ्जन: परमम्चाम्यमुपैति ।**

**ததாவித்வார் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம்சாம்யமுபைதி ।**

என்று முண்டகோபநிஷதமானது ஆன்மா சிவத்தோடு சிவசாமியமுற்று விளங்கிஞன். என்னும் உண்மையைக் குறிக்கும் பொருட்டு, கைவல்லியத்து (46-வது) சுருதிபாகம் "புண்ணியமில்லே, பாபம் இல்லே" என்பது பொருள்பட சூசகமாய்க் கூறிற்று.

**G.** இந்த முத்தனுக்குச் சிவலோகத்திலிருந்து மீளத்திரும்பவதில்லே, அதனுல் பிறப்பிறப்பில்லே என்ற கருத்திஞலன்றே

**प्रम्मलोकम् पिसम्पत्यते ।**
**नचपु नरावर्त्तते ।**

**ப்ரம்மலோகம் பிஸம்பத்யதே ।**
**நசபு நராவர்த்ததே ।**

என்று சாந்தோக்கியோபநிஷதம் கூறிய பொருளேக்கொண்டு பாசுபத யோகிக்குச் செனன மரணமில்லே என்னும் உண்மையைக் கைவல்லியசுருதி (46-ம்) கருதிய பாகத்திஞல் சூசிப்பித்தது. இவ்வாறு சிவசாமியத்திஞல் அதீதவின்பமுற்று நின்ற முத்தனுக்கு தூலமாகிய பிருதிவி, அப்பு, தேயு, வாயு ஆகாசத்தை இடமாகக் கொண்டு எய்தும் சப்தாதி விஷயங்களே உணரவாரான் என்ற கருத்திஞல்,

**यत्रनान्त् पच्यतिनान्यत्च्रुणोति नान्यत् विजानाति ।**

**யத்ரநாந்த் பச்யதிநாந்யத்ச்ருணோதி நாந்யத் விஜாநாதி ।**

அறிஞன் ஒன்றையும் காண்கின்றிலனுய், ஒன்றையுங் கேட்கின்றிலனுய், ஒன்றையும் அறிகின்றிலனுய், நின்ற (அதீத) நிஜலயானது "பூமா" எனப்படும் என்று சாந்தோக்கியோபநிஷதங் கூறிய பொருளே, கைவல்லிய (47-ம்) சுருதிப்பாகம் ஸ்தூலபூதங்களேக் கூறுதல் வாயிலாகக் குறிப்பால் உணர்த்திற்று என்று கோடலுமாகும். இந்தச் சிவபிரான் சத்தாகிய பசுவுக்கும், அசத்தாகிய பாசத்துக்கும் வேறுய், அவற்றுக்குப் பதியாய் நின்ருர் என்ற கருத்திஞல்

**सच्ता सच्च जकत्विच्वम् चरीरम् परमेष्टिन: ।**
**यतितम् सतिति प्रोक्तम् यच्चा सतिति कत्यते ।**
**तयो: पतित्वात्तुचिव: सतचत्पचु रुच्यते ॥**

**ஸச்தா ஸச்ச ஜகத்விச்வம் சரீரம் பரமேஷ்டிந: ।**
**யதிதம் ஸதிதி ப்ரோக்தம் யச்சா ஸதிதி கத்யதே ।**
**தயோ: பதித்வாத்துசிவ: ஸதசத்பசு ருச்யதே ॥**

என்று சிவபுராணங் கூறியவாறு, சமஸ்தசாட்சியாய் நின்ற சிவபிராஜனச் சத்தாகிய பசுவுக்கு அசத்தாகிய பாசத்துக்கும் வேறுகிய சத்தி என்பதை உணர்த்துமாறு

**चमस्तचाक्षिम् सतस्त् विकीनम् ।**

**சமஸ்தசாக்ஷிம் ஸதஸ்த் விகீநம் ।**

என்று கைவல்லியத்து (49-வது) மந்திரம் கூறி, பின்னர்ப் பிரகிருதி மண்டலத்துக்கு மேலே சமஸ்தசாட்சியாக முன்னரே (15-ம்) மந்திரத்திற் பேசப்பட்ட உமாசமேதராகிய சிவபிரானே இந்தச் சத்துக்கும் அசத்துக்கும் வேறா அவைக்குப் பதியாயுள்ள பதியாம் என்பது போதர, ஆங்குப் பிரயோகிக்கப்பட்ட "சமஸ்த சாட்சியாய்" நின்றுர் எனப் பொருள்படும் பதம் இவ்விறுதி (19-வது) மந்திரத்திலும் சூசிக்கப்பட்டதா மென்க.

---

(கைவல்லியோபநிஷதத்தை வைதிகபாசுபத தீகைஷயுடையோன் செபித்து மேற்கதியடையுமாறு உபதேசித்தமை)

**यच्चत रुत्रीयतीते चोक्नि पूतोपवति ।**
**सवायु पूतोपवति ।**
**स आत्म पूतोपवति ।**
**स चुरापानात् पूतोपवति ।**
**स प्रम्म हत्याया: पूतोपवति ।**
**सचुवर्णस् तेयात पूतोपवति ।**
**सक्रुत्या क्रुत्यात् पूतोपवति ।**
**तस्मातवि मुक्त माच्रितो पवत्वित्याच्रमी ।**
**चर्वता सक्रुत् वाजपेत् ।**
**अनेन ञान माप्नोति सम्चारार्णव नाचनम् ।**
**तस्मातेवम् वितित्वैनम् कैवल्यम् पतमच्नुते ।**
**कैवल्यम् पतमच्नुते ॥**

**யச்சத ருத்ரீயதீதே சோக்நி பூதோபவதி ।**
**ஸவாயு பூதோபவதி ।**
**ஸ ஆத்ம பூதோபவதி ।**
**ஸ சுராபாநாத் பூதோபவதி ।**
**ஸ ப்ரம்ம ஹத்யாயா: பூதோபவதி ।**
**ஸசுவர்ணஸ் தேயாத பூதோபவதி ।**
**ஸக்ருத்யா க்ருத்யாத் பூதோபவதி ।**
**தஸ்மாதவி முக்த மாச்ரிதோ பவத்வித்யாச்ரமீ ।**
**சர்வதா ஸக்ருத் வாஜபேத் ।**
**அநேந ஞாந மாப்நோதி ஸம்சாரார்ணவ நாசநம் ।**
**தஸ்மாதேவம் விதித்வைநம் கைவல்யம் பதமச்நுதே ।**
**கைவல்யம் பதமச்நுதே ॥**

(இதன் பொருள்) எவன் இந்தச் சதருத்திரீயத்தை அத்தியயனஞ் செய்கின்றனே, அவன் அக்கினியைப் போலச்சுத்தனுகின்றன். அவன் வாயுவைப் போலச் சுத்தனுகின்றன். அவன் சுவர்ணத்தைத் திருடிய குற்றத்தினின்று சுத்தனுகின்றன். சுராபானஞ் செய்த தோஷத்தினின்று சுத்தனுகின்றன். பிரமகத்தி தோஷத்தினின் சுத்தனுகின்றன். செய்யக் கூடாததைச் செய்தும், செய்ய வேண்டியதைச் செய்யாதும் விட்ட தோஷத்தினின் சுத்தனுகின்றன். ஆதனுல் வாராணுசியை அடைந்து வைதிக பாசுபத விரதமுடையவனுய், எப்போதும் மேனும், ஓர் முறையேனும் இந்த உபநிஷதத்தைச் செபித்து வருவதினுல், சம்சார முத்திரத்தை நாசஞ் செய்யும் சிவஞானத்தை அடையற்பாலனுகின்றன். ஆதலினுல், இவ்வாறு சிவத்தை அறிந்து, கைவல்லிய பயஊனத் துய்க்கின்றன். கைவல்லிய பயஊனத் துய்க்கின்றன்.

அவிமுக்தம் - வைதிகபாசுபத தீக்ஷையுடையனுய் (அத்தியாசிரமியாய், இக்கைவல்லியோபநிஷதத்தை அவிமுக்தம் எனப்படும் ஸ்ரீகாசிப்பதையை அடைந்து செபிக்க என்று ஈண்டுக் கூறப்பட்டமையில், உபலக்ஷயால் (இனம்பற்றி) சிதம்பரம், திருவாரூர், காளகஸ்தி, கேதீச்சரம், நகுலேசுவரமுதலிய சிவஸ்தலங்களும், திருச்செந்தூர் முதலிய சுப்பிரமணிய ஸ்தலங்களும் அக்கைவல்லியோபநிஷதம் செபித்தற்கு உரித்த ஸ்தானங்களாகத் தழுவப்படும்.